# திருவாழ் கொளிபுத்தூர்க் கோயில்

## வ ர லா று



கோயிலும் விமானமும்

ஆலய வெளியீடு

1962

சிவாஜி அச்சுக்கூடம், திருச்சி-2. போன்: 2066.

# திருவாழ் கொளிபுத்தூர்க் கோயில்

## வ ர லா று

( தேவாரப் பாடல் பெற்றது )

( திருவாளொளிபுற்றூர் )


எழுதியவர் :

வரலாற்றுச் செல்வர் - புலவர் மாமணி - ஆராய்ச்சிமணி

**திரு. ஸ்ரீ பஞ்சநதம் பிள்ளை அவர்கள்**

தமிழாசிரியர் — திருச்சிராப்பள்ளி.

**(Writer of Guide Books for Temples and Religious Lecturer H. R. & C. E.)**



**திரு. S. ஆனந்த நடேசம் பிள்ளை அவர்கள்,**

பரம்பரை நிர்வாக தர்மகர்த்தர்

**திரு. S. அழகப் பிள்ளை அவர்கள்,**

**திரு. P. M. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள்,**

பரம்பரைத் தர்மகர்த்தர்கள்.

மேற்படி தேவஸ்தானம் நிர்வாக அதிகாரி,

**திரு. சுவாமி வேங்கடாசலம் அவர்கள்**

ஆகியோர்களால் வெளியிடப்பெற்றது.

ஆலய வெளியீடு

## நன்றியுரை



கோயிலின் முன் கோபுர வாயிலாகவே கோயிலுக்குள் சென்று பெருமானை வணங்குகிறோம். அதுபோல அண்ணலின் அருள்பெற்ற ஆன்றோர்கள் அருளிய நூல்களின் வாயிலாக இறைவனைக் காண்பதுவும் முறையாகும். "நூலால் நன்றாய் நினைமின்கள்" என்கிறார் அப்பரடிகள். கோயிலின் தத்துவங்களை அறிதற்கு வரலாறுகள் அவசியம். வழக்கமாகப் பல கோயில்களின் வ ர ல ா று க ளை எழுதி வரும் திருச்சி வரலாற்றுச் செல்வர், தமிழ்ப் புலவர் திரு. R. பஞ்சநதம் பிள்ளை அவர்கள் முன்னுள்ள தல புராண நூலைத் தழுவி இக்கோயிலின் வரலாற்றை எழுதி உதவினார்கள். அவர்களுக்கு ஆலயச் சார்பில் நன்றி.

இக்கோயிலுக்குரிய பரம்பரைத் தர்மகர்த்தர்கள் தெய்வ பக்தியும், சீலமும், நல்ல சிந்தனையும், அன்பும் உடையவர்கள். கோயிலின் முன்னேற்றத்திற்கான பல தொண்டுகளிலும் ஈடுபட்டு வருகிறார்கள். அவர்களின் ஒத்துழைப்பும், கூட்டுறவும் எனக்கு ஆக்கம் தந்து உதவுகின்றன. அவர்களுடைய பேருக்கத்தாலும், பெருமான் திருவருளாலும் இவ்வரலாறு வெளிவருகிறது. அன்பர்கள் படித்துப் பயன் அடைவார்களாக.

திருவாளபுத்தூர், 4—6—1962.

சுவாமி வெங்கடாசலம்,
நிர்வாக அதிகாரி.

# முன்னுரை

தெய்வ உணர்ச்சியை உண்டாக்கும் ஊற்றிடங்களாக ஆன்றோர்கள் அமைத்த ஆலயங்கள் விளங்குகின்றன. "ஆலயந்தொழுவது சாலவும் நன்று" என்பர் ஆன்றோர். தமிழ்நாட்டில், காணும் இடங்களில் எல்லாம் கண்ணைக் கவரும்படியான பல கோயில்கள் உள்ளன. அவைகளுள் தஞ்சாவூர் ஜில்லா—மாயூரம் தாலுகாவில் மாயூரம் ரயில் நிலையத்திலிருந்து மேற்கே சுமார் 10 மைல் தூரந்தில் **திருவாள் ஒளிபுற்றூர்** என்னும் திருத்தலம் உள்ளது. அர்ச்சுனனுடைய வாளை புற்றில் ஒளிதது வைத்த காரணத்தால் இப்பெயர் ஏற்பட்டது. தேவாரப் பாடல் பெற்ற 274 தலங்களுள் ஒன்று. திருஞானசம்பந்தரும், சுந்தரரும் தேவாரம் பாடியுள்ளார்கள். திரிசிரபுரம் மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் புராணம் பாடி யுள்ளார்கள். இத்தலம் தற்போது திருவாழ் கொளிபுத்தூர் என்றும், திருவாள புத்தூர் என்றும் வழங்குகிறது. பழமையான கோயில். கோயிலுக்கு வருவோர் கோயிலின் பெருமைகளையும் அறிந்துகொள்வது நலம். சென்னை அறநிலையப் பாதுகாப்பு இலாகாவின் Hindu Religious & Charitable Endowments)அனுமதிப்படி இவ்வரலாறு தல புராணத்தைத் தழுவிச் சுருக்கமாய் எழுதப் பெற்றது,

பழங்காலச் சின்னங்களாகிய கோயிற் சிற்பங்களைப் பாதுகாப்பதிலும், தல வரலாறுகள் வெளிவரச் செய்வதிலும், சமய உண்மைகளைப் பரப்புவதிலும், கோயில் திருப்பணிகளைச் செய்விப்பதிலும் தற்போதுள்ள அறநிலையப் பாதுகாப்புத் தலைவர்—ஆணையர் திரு. M. S **சாரங்கபாணி முதலியார்** B. A B. L. அவர்களும், மற்றையோர்களும் ஆவன செய்து வருகிறார்கள். அவர்களுக்கு நமது நன்றி.

இதில் கோயில் விளக்கமும், தலப் பெருமைகளும், வரலாறுகளும், தேவாரம் முதலிய துதிப் பாடல்களும் சேர்க்கப் பெற்றுள்ளன, அன்பர்கள் படித்து ஸ்ரீ மாணிக்க வண்ணரின் திருவருளைப் பெறுவார்களாக.

திருச்சிராப்பள்ளி
மலைக்கோட்டை
30—5—62.

R. பஞ்சநதம் பிள்ளை,
தமிழ் ஆசிரியர்

## உள்ளடக்கம்



### கோயில் விளக்கம்

கோயில்— திருவாளொளிபுற்றூர்
இடம்— திருவாளபுத்தூர்
மூலவர்— ஸ்ரீ மாணிக்க வண்ணர்
அம்மன்— ஸ்ரீவண்டமர் பூங்குழலம்மை— துர்க்கை.
தீர்த்தம்— பிரம தீர்த்தம்— தண்ட தீர்த்தம்
மரம்— வாகை மரம்
வழிபட்டோர்— திருமால்—இந்திரன்—வாசுகி அருச்சுனன் முதலியோர்—
சுற்றளவு: கிழமேலடி 300, தென்வடலடி 185.

தஞ்சாவூர் ஜில்லா— மாயூரம் தாலூகாவில், மாயூரத்துக்கு மேற்கே சுமார் 10 மைல் தூரத்தில் கோயில் உள்ளது. மோட்டார் வண்டிகள் செல்கின்றன. தேவாரம் பெற்ற 274 தலங்களில் ஒன்று. திருஞானசம்பந்தர்— சுந்தரர் பாடிய தேவாரங்களும், மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய புராணமும் உள்ளன.

உ

சிவமயம்

# அணிந்துரை

*திருச்சிற்றம்பலம் காந்தி வித்தியாலயம் தலைவர்*

**திரு. மு. அருணசலம் அவர்கள் M. A.**

*அன்புடன் வழங்கியது.*

---

எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்து நிற்கின்ற ஆண்டவன், அன்பர்கள் வழிபடுமாறு எளிதாய் வெளிப்படும் இடங்களே சிவலிங்கத் திருமேனிகள். சோழ நாட்டில் உள்ள எண்ணற்ற கோயில்களில் சிறப்புடையது திருவாழ்கொளிபுத்தூர். இறைவனுடைய அருள் திரு—வாழ்வு கொள்ளும் புற்றுடைய ஊர் ஆதலினால் திருவாழ் கொளிபுத்தூர்; சம்பந்தர் சுந்தரருடைய பதிகங்களும், அப்பருடைய பாடலும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் புராணமும் பெற்ற பெருமையுடையது; பாரத சரித்திரத் தொடர்பும் கொண்டது. இக்கோயிலில் எழுந்தருளியுள்ள துர்க்காதேவி சந்நிதி மிக்க சிறப்புடையது; பக்தர்கள் துர்க்கையை வழிபட்டு இன்றும் நற்பேறு பெற்றுவருகிறார்கள்.

பல திருக்கோயில்களின் வரலாற்றை எழுதி எழுதிப் பக்குவமடைந்த கரத்தால் பேரன்பர் வரலாற்றுச்செல்வர் R பஞ்சநதம் பிள்ளை அவர்கள் இத்தல வரலாற்றை எழுதியிருக்கிறார்கள். பிள்ளையவர்கள் எழுதியுள்ள வரலாறுகள், கோயில் சரித்திரத்தை அறிவதற்குச் சுருங்கிய விளக்கங்கள் ஆகும். இந்த வரலாற்றைப் படித்து பின் இவ்வாலய தரிசனம் செய்பவர்கள் இவ்வாலயச் சிறப்புக்களை எல்லாம் நன்குணர்ந்து போற்றும் அறிவு பெறுவார்கள்; அதனோடு ஆலய வழிபாட்டிற்கு ஏற்ற பக்குவமும் பெறுவார்கள். பிள்ளையவர்களுடைய அடக்கமும், அமைதியும், அன்புடைமையும் இவ்வரலாற்றில் சிறந்து காணப்படுகின்றன. இத்தகைய சிறு வரலாற்றுக் குறிப்புக்களால் பிள்ளையவர்கள் தமிழ் நாட்டுச் சிவாலய வழிபாட்டுக்குப் பெரும் சேவை செய்திருக்கிறார்கள். வாழ்க அவர்களுடைய திருத்தொண்டு, ஸ்ரீ மாணிக்க வண்ணப்பெருமான் அவர்களுக்கு நல்ல உடல் நலத்தை அருள்வாளுக.

இவ்வெளியீட்டில் நிர்வாக அதிகாரி சாமி வேங்கடாசலம் அவர்களுடைய முயற்சி மிகவும் பாராட்டத் தக்கது. ஆண்டில் இளையவராயினும் ஆற்றலில் முதியவராகிய வேங்கடாசலத்தினுடைய தொண்டு சிறப்பதாக.

திருச்சிற்றம்பலம்
3—7—62.

அன்பன்
மு. அருணசலம்

உ
சிவமயம்

# திருவாழ் கொளிபுத்தூர்க் கோயில்

## வரலாறு

"பூண்நெடுநாகம் அசைத்தனலாடிப்
புன்தலை அங்கையிலேந்தி
ஊண்இடு பிச்சையூர் ஐயம்
உண்டி யென்று பல கூறி
வாள்நெடுங்கண் உமை மங்கை யொர் பாகம்
ஆயவன் வாழ் கொளிபுத்தூர்த்
தாள்நெடுமாமலரிட்டுத்
தலைவன்தாள் நிழல் சார்வோம்"

(திருஞானசம்பந்தர்)

### 1. கோயிலும் குறிகளும்

ஆதியந்தங்கடந்த பரம்பொருளாகிய இறைவன் உலகத்திலுள்ள பல உயிர்களும் துன்பம் நீங்கி இன்பம் பெற்று உய்யும் வண்ணம், தன் கடந்த நிலையான அருவநிலையிலிருந்து இறங்கி இப் பூவுலகில் ஆங்காங்குள்ள பல தலங்களில் உருவத் திருமேனிகொண்டு எழுந்தருளியிருந்து பக்தியுடன் வழிபடும் அடியார்களுக்கு அருள் செய்து வருகிறான். அத்தகைய சிறப்பிடங்களே ஆலயங்கள் ஆகும். பசுவின் உடல் முழுதும் பால் மறைந்திருந்தபோதிலும் மடியின் மூலமாகவே பால் வெளிப்படுவது போலவும், சூரியன் எங்கும் பரவியிருந்தபோதிலும் பளிங்குக் கல்லின் (Lens) மூலமே கிரணங்கள் விரைவில் வெளிப்படுவது போலவும், நிலத்துக்கடியில் நீர் இருந்தபோதிலும்,

தோண்டிய இடத்தில்தானே நீர் தோன்றுவது போலவும், இறைவன் எங்கும் வியாபித்திருந்த போதிலும் பெரியோர்கள் அமைத்த ஆலங்களில் உள்ள மூர்த்திகளின் மூலமாகவே இறைவன் வெளிப்பட்டு அன்பர்களுக்கு அருள்செய்வான். "இருஞ்சுரபிக்கெங்கும் உருக்காணை ஒண்ணுத பால் முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல வெளிப் பட்டருள்வன் அன்பர்க்கே".

(சிவஞானசித்தியார்)

"எங்கும் சிவனிருப்பன் ஆனாலும் ஏசற்ற
சங்கமத்தும் சற்குருவின் தன்னிடத்தும் லிங்கத்தும்
ஆவினுடம் பெல்லாமும் ஆவரித்து நிற்கினும் பால்
பாவுமுலைக் கண் மிகுதிப் பார்"

சிவஞானப் பிரகாச வெண்பா)

இவ்வாறு புறத்தே கோயில் கொண்டு விளங் கும் பெருமான், பக்தியுடன் வழிபடும் அடியார் களின் உள்ளத்தையும் கோயிலாகக்கொண்டு அருள் செய்கிறான். "காலையும் மாலையும் கைதொழு வார்மனம் ஆலயமாகும்"—(அப்பர்).

தென்னாடாகிய தமிழ்நாடு மிகுதியானகோயில் களைக்கொண்டது. நாட்டை வளப்படுத்தும் ஆறு களும், வாவிகளும், சோலைகளும், சாலைகளும் சூழ்ந்து இயற்கைக் காட்சிகளைத் தந்து இன்பம் ஊட்டுகின்றன. வானளாவிய கோபுரங்களும், விமானங்களும், காண்போருக்குத் தூரத்திலிருந்த படியே தெய்வ உணர்ச்சியைத் தூண்டுகின்றன. உடலுக்கு உணவைத்தரும் நிலங்கள் அமைந் திருப்பதுபோல, உள்ளத்துக்கு உணவாகிய பக்தியை உண்டாக்கும் பாங்குடைய கோயில்கள் பல அணிகளாக விளங்குகின்றன. நாட்டின் பல

இடங்களிலும் சைவ வைணவத்தலங்கள் பல ஆங்காங்கு மிளிர்கின்றன. இவ்வகையில் தென்னாடு தெய்வமணங்கமழும் திருநாடாகத் திகழ்கிறது.

"நோக்கிய இடங்களெல்லாம் நுவலருந் தலங்களாக
தேக்கிய தீர்த்தமாகச் சிவலிங்க மூர்த்தியாக
ஆக்கிய தவத்தாலும் அடைந்தவர்க்கற மென்றேதும்
பாக்கியமாக்கி மேலுய்ப்பது முது சென்னிநாடு.

(மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை)

மேலும் நமது முன்னோர்களின் நாகரிக வாழ்வுக்கு எடுத்துக்காட்டாக முன்னோர்கள் அமைத்த திருக்கோயில்கள் விளங்குகின்றன. இவைகள் பக்தியை உண்டாக்கும் இடங்களாவதன்றிப் பெருஞ் சிற்பங்கள் நிறைந்த பெட்டகங்கள் ஆகும். மின்சார அணுக்கள் நிறைந்துள்ள இடம் (Power House) போலத் திருவருள் அணுக்கள் நிறைந்த சிறப்பிடங்கள் ஆகும். எழுத்தின் ஒலிவடிவை உணர்த்துவதற்கு வரிவடிவெழுத்து அமைந்தது போலக் கட்புலனால் காணமுடியாத கடவுளைக் காட்டும் சாதனங்களாகக் கோயில்கள் விளங்குகின்றன. இவைகளை நமது முன்னோர்கள் தம் உயிரினும் மேலாகப் பாதுகாத்துப் பின் வழியினராகிய நமக்கு அருஞ் செல்வங்களாக வைத்துச் சென்றார்கள். நாட்டின் நலத்துக்கும் மக்களின் நல் வாழ்வுக்கும் கோயில்கள் இன்றியமையாதன. வாழ்க்கைக்கடலில் அகப்பட்டுத், துன்புறும் மக்களுக்குக் கோயில்கள் கலங்கரை விளக்கங்களாக (Light House) விளங்குகின்றன. "ஆலயந் தொழுவது சாலவும் நன்று" என்று ஆன்றோரும் கூறியுள்ளார்.

ஆதலின் பெறுதற்கருமையான மனிதப்பிறவியைப் பெற்றவர் அனைவரும், கோயில்களில் குடி

கொண்டபசுபதியாகிய பரமனை அன்பினால் வழிபட்டு, அவன் வகுத்த நன்னெறியில் சென்று அவனருளைப் பெற முயலுதல் சிறந்த கடமையாகும். "உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பில் உத்தமனைக்காண்" என்று ஔவையாரும் கூறியுள்ளார்.

## 2. கோயிலும் இருப்பிடமும்

தமிழ்நாட்டில் பெருமான் உறையும் கோயில்கள் பல. அவை சிவன் கோயில்கள், முருகன் கோயில்கள், அம்மன் கோயில்கள், திருமால் கோயில்கள் முதலியன. இவைகளில் அந்தந்த சமயத் தலைவர்களால் தேவாரம பாடப்பெற்ற-மங்களாசாசனம் பெற்ற தலங்களும், பெயர்மட்டும் குறிக்கப் பெற்ற வைப்புத் தலங்களும், தலபுராணங்களைக் கொண்ட கோயில்களும், தனிப்பாடல் பெற்ற தலங்களும், பக்தர்களால் அமைக்கப்பெற்ற அபிமானத் தலங்களும், பிற தலங்களும் அடங்கியுள்ளன. இவைகளுள் சமயத் தலைவர்களால் தேவாரம் பாடப் பெற்ற 274 திருத்தலங்களுள் ஒன்றாகத் திருவாழ்கொளிபுத்தூர்க் கோயில் காவிரிக் கரையில் உள்ளது.

எப்போதும் வற்றாத வளமுடைய நீர்ப் பெருக்கையுடைய காவிரி நதி பாயும் நாடு சோழ நாடு. "சோழநாடு சோறுடைத்து" என்னும் பழமொழியைப் பெற்றது. இந்நாட்டின் பெருமையை மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பின்வருமாறு காட்டுகிறார்.

"பூவினுள் பதுமம் போலும் புருடருள் திருமால் போலும்
காவினுள் கற்பம்போலும் கலைகளுள் ஞானம்போலும்
ஆவினுள் சுரரான்போலும் அறத்துள் இல்லறமேபோலும்
நாவினுள் மெய்ந்நாப்போலும் நாட்டினுள் சோழநாடு"

மேலும் "முந்நாட்டின் முன் நாடாய்ச் சோழர் குலக்கொடியே என்னக் காவேரி வளங்காட்டும் திருநாட்டின் பெருமையது கரையப்போமோ" என்று மற்ருேராசிரியர் கூறுகிருர்.

மேலும் சோழநாட்டின் சிறப்பைப் பற்றி மகா வித்வான் பிள்ளை அவர்கள் இவ்வூர்த் தல புராணத்தில் பின்வருமாறு காட்டுகிருர்.

"அடிபடும் இடங்களெல்லாம் அரும்பெறல் தலங்கள் தோய
முடிபடுதேயமெல்லாம் முழுப்பெருந் தீர்த்தங்காணப்
படிபடு உருவமெல்லாம் பரசிவ உருவமாகக்
குடிபடுதருமம் யார்க்கும் கொடுப்பது சோழநாடு"

"புண்ணிய தீர்த்த நானம் புண்ணிய மூர்த்தி சேவை
புண்ணிய தானவாசம் பொருந்திடும் எளிதென் ருேர்ந்து
புண்ணிய விருப்பர் யாரும் பொலிதரு தன்பால்மேவப்
புண்ணியம் வளர்த்து நாளும் பொலிவது சோழநாடு"

(தலபுராணம்)

இத்தகைய பெருமைகளையுடைய சோழ நாட்டில் தஞ்சாவூர் ஜில்லா—மாயூரம் தாலூகாவில் மாயூரத்திருந்து பந்தணைநல்லூர் மோட்டார் வண்டி மார்க்கத்தில் மேற்கே சுமார் 10 மைல் தூரத்தில் திருவாழ்கொளிபுத்தூர்க் கோயில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து மோட்டார் வண்டி மார்க்கத்தில் 27 மைல் தூரத்திலும், வைத்தீஸ்வரன் கோயில் (புள்ளிருக்குவேளூர்) ரயில் நிலையத்திலிருந்து 6 மைல் தூரத்திலும் கோயில் உள்ளது. இவ்வூரில் துவக்கப்பள்ளியும், தபால் நிலையமும், ஊராட்சி நிலையமும் உள்ளன. மக்கட் தொகை சுமார் 3000. பழமையான ஊர். கூட்டுறவுச் சங்க முறையில் கோயில் நிலங்கள் சாகுபடி செய்யப்படுகின்றன.

திருவாழ் கொளிபுத்தூர் என்னும் இத்தலத் திற்கு அரதனபுரம், துர்க்காபுரம், வன்மீகபுரம் முதலிய பெயர்களும் வழங்கும். வாழ்வுக்கு ஒளிதரும் பெருமான் எழுந்தளியிருப்பதால் திருவாழ்கொளிபுத்தூர் என்றும் அருச்சுன னுடைய வாளைப் பெருமான் புற்றில் ஒளித்து வைத்ததாலும் திருவாள்கொளிபுற்றூர் என்றும், வாசுகி அமரும் புற்றைக் கொண்டிருப்பதால் வன்மீகபுரம் என்றும், வரங்களை வழங்கும் துர்க்கை எழுந்தருளியிருப்பதால் துர்க்காபுரம் என்றும், திருமால் மாணிக்கத்தை வைத்துப் பூஜித்ததாலும், பெருமான் மாணிக்கவண்ணராய்க் காட்சி தருவதாலும் அரதனபுரம் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. திருவாள் ஒளிபுற்றூர் என்பது திருவாழ்கொளிபுத்தூர் என மருவி வழங்கு கிறது. தற்போது திருவாளபுத்தூர் என வழங்கு கிறது. புத்தூர் என்ற முடிபைப் பெற்ற பல தலங்களில் இதுவும் ஒன்று.

**திருவாழ்கொளிபுத்தூரைஅடுத்து ஆங்காங்குள்ள தலங்களின் விவரம்:**

கிழக்கில் தலை ஞாயிறு, திருப்புன்கூர், புள் ளிருக்கும் வேளூர், தலங்களும், தெற்கில் திருக் குறுக்கை, நீடூர், பொன்னூர், சோழம்பேட்டை, திருமணஞ்சேரி தலங்களும், மேற்கில் திருமேனி யார் கோயில், திருப்பந்தணை நல்லூர் தலங்களும், வடக்கில் கடகம், மண்ணிப்படிக்கரை, திருக்குரக் குக்கா முதலிய தலங்களும் ஆங்காங்கு சிற்சில மைல்கள் தூரத்தில் உள்ளன. எனவே பல தலங் களுக்கு நடுவில் திருவாழ்கொளிபுத்தூர்ப் பெரு மான் கோயில் கொண்டு அடியார்களுக்கு அருள் செய்து வருகிறான். ஸ்ரீ மாணிக்க வண்ணரைத் தரிசிக்க வரும் அன்பர்கள் பக்கத்திலுள்ள கோயில் களையும் தரிசித்துச் செல்லலாம்.

## 3. கோயிலின் அமைப்பு

ஊருக்கு நடுவில் கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கியது. கோயிலுக்குள் இரண்டு பிராகாரமும், வெளியில் ஓர் பிராகாரமும் உள்ளன. முன் வாயிலைக் கடந்தால் கொடி நிலையும் மேடையும் உள்ளே செங்கல்லால் அமைத்த மண்டபங்களும் உள்ளன. தென்கிழக்கில் நாகர் மேடையும் வாகைமர மேடையும் இருக்கும். மூலவர் கிழக்கு நோக்கியுள்ளார். பின்புறம் விநாயகர், முருகர், கஜலட்சுமி. சரஸ்வதி முதலிய மூர்த்திகளின் சந்நிதிகள் உள்ளன. வடபுறம் துர்க்கையின் பிரதான சந்நிதியும், நடராஜர், அம்மன் சந்நிதிகளும் உள்ளன. உள்ளே ஓர் கோபுரம் 3 கண்களுடன் விளங்குகிறது. முன் வாயிலுக்கு கோபுரமில்லை. அழிந்து விட்டதாகத் தெரிகிறது. பக்கத்தில் வாகன மண்டபமும், அலுவலகமும், விசாக உற்சவ அலங்கார மண்டபமும் உள்ளன. கோயிலுக்கு முன்னே பிரம்ம தீர்த்தமாகிய திருக்குளம் உள்ளது. இத்தலத்துக்குரிய மரம் வாகை. இதன் சிறப்பை "வாகை நுண் துளி வீசும் வாழ்கொளி புத்தூர் உளாரே" என்று சம்பந்தர் பாடுகிறார். மற்றோர் பாடலில் புராண ஆசிரியர் வாகையின் பெருமையைப் பின்வருமாறு காட்டுகிறார்.

"பாதலத் துறையராவின் பகுப்பெனச் சடைகள் போக்கி
மீதலத்தவர்க்கு மேனி வெயர்வற நீழல்நல்கிப்
பூதலத்தவருஞ் சூழ்ந்து புண்ணியங் கொள்ளை கொள்ள
மாதலத்தவர் களேத்த வளங்கொடு பொலியும் வாகை."

(தல புராணம்)

இத்தகைய சிறப்புக்களையுடைய திருவாளொளிபுற்றூரில் பெருமானைத் தரிசிக்க வருபவர்களின் பாவங்கள் நீங்கி புண்ணியங் கைக்கொண்

டேகும்படிக்கும், அவர்களுக்கு இன்பம் வழங்குவதற்கும் பெருமான் கோயில் கொண்டுள்ளான்.

"வகுத்த இச்சிறப்பு மோங்க வாளொளிபுற்றூர் நாப்பண்
மிகுத்த வெம்பாவ நீங்கி மேன்மை கூறறங்கைக்கொண்டே
தொகுத்த பல்பவமு மோவத் துன்னினூர் தம்மை இன்பம்
புகுத்த நாணுளு மோங்கிப் பொலிதரும் புராணர் கோயில்
(தல புராணம்)

## 4. கோயிலின் அமைப்பு படம்

(தனி பக்கத்தில் உள்ளது)

### எண்களின் விளக்கம்

1. முன் வாயில்
2 வாகன மண்டபம்
3. அலுவலகம்—விசாக மண்டபம்
4. திருக்குளம்—பிரம்ம தீர்த்தம்
5. கொடிநிலை
6 (a) நாகர்மேடை
6. (b) வாகைமரம்
7. அம்மன் கோவில்
8. உள் கோபுரம்—3 கண்கள்
9. நடராஜர்
9. (a) சூரியன்—சந்திரன்—பைரவர்
10. உற்சவ மூர்த்திகள்
11. யோகீஸ்வரர்
12. விநாயகர்
13. முருகர்
13. (a) உக்கிராண அறை
14. கஜலட்சுமி
15. சரஸ்வதி
16. மூலவர்
17. சண்டிகேஸ்வரர்
18. துர்க்கையம்மன்
19. குருஸ்தானமுடையார்
20. மடைப்பள்ளி
21 (a) பள்ளியறை
21. (b) உற்சவ துர்க்கை
22-23-24. செங்கல் மண்டபங்கள்

## 5. மூர்த்திகளின் பெயர்கள்

இத்தலத்துப் பெருமானுக்கு வடமொழியில் ரத்னபுரீஸ்வரர் என்றும், தமிழில் மாணிக்க வண்ணர்—மாணிக்கலிங்கர் என்ற பெயர்களும்,



கோபுரமும், மண்டபமும்.



வாகைமரமும், நாகர்மேடையும்.

தேவியாருக்கு வண்டார் பூங்குழலி, வண்டமர் பூங்குழல் நாயகி என்னும் பெயர்களும் வழங்குகின்றன. கோயிலுக்கு முன் பிரம தீர்த்தக் குளமும், சக்கர தீர்த்தம், தண்ட தீர்த்தம் முதலியனவும் தீர்த்தங்களாக உள்ளன. தலத்துக்குரிய மரம் வாகை. இதன் பெருமை முன்னே கூறப்பட்டுள்ளது.

## 6. தலப்பெருமைகள்.

இத்தலம் மூர்த்தி—தலம்— தீர்த்தம் மூன்றிலும் சிறப்புடையது. பழமையான கோயில். மன அமைதியை உண்டாக்கும் இடம். தேவாரம் பெற்ற 274 தலங்களில் இக்கோயில் ஒன்று. திருஞானசம்பந்தரும், சுந்தரரும் தேவாரம் பாடியுள்ளார்கள். திரிசிரபுரம் (திருச்சி) மகா வித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் புராணம் பாடியுள்ளார். இத்தலத்தில் வாகை தலத்துக்குரிய மரம். பல தீர்த்தங்களும் உள்ளன. பிட்சாடனரும், துர்க்கையும் சிறப்பு மூர்த்தியாக விளங்குகிருர்கள். சம்பந்தர் பாடிய தேவாரத்தில் ஒவ்வோர் பாட்டிலும் பிட்சாடனரின் பெருமையைக் கூறுகிருர். சுந்தரர் ஒவ்வோர் செய்யுளிலும் "வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்தென் நினைக்கேனே" என்று காட்டுகிருர்.

புராணப்படி இத்தலம் மிகப் பெருமைகளையுடையது. அருச்சுனன் தீர்த்தயாத்திரை வரும்போது நீர் வேட்கை மேலிட பெருமான் ஓர் மறையவர் வேடங்கொண்டு தோன்றி அவன் கைவாளை

வாங்கிக்கொண்டு ஓர் தண்டைக் கொடுத்து ஊன றிய இடத்தில் நீர் ஊறும் என்று கூறி அவன் வாளைப் புற்றில் மறைத்து மறைந்தார். இதனால் இத்தலம் வாள் ஒளிபுற்றூர் என்றாயிற்று. தண் டூன்றி நீர் தோன்றிய இடம் தண்ட தீர்த்தம் என வழங்குகிறது. தற்போது குமிழிக்குளம் என வழங் கப்படுகிறது. மேலும் குசகேது என்னும் சோழ மன்னனுக்குப் பெருமான் மூன்று வரங்களை அரு ளிய இடம். துர்க்காதேவி தவஞ் செய்து மகிடா சூரனைக் கொல்லும் வலிமையைப் பெற்றது. அவ னைக் கொன்ற பாவத்தையும் போக்கிக் கொண் டது, வேண்டுவார்க்கு வேண்டுவன அளிக்கும் அருள் நோக்கம் பெற்றது.

பிரமன் தவஞ் செய்து படைப்புத் தொழில் கைவரப் பெற்றது. சிவ புண்ணியம் சிறிதாயி னும், அதனைப் பன்மடங்காகப் பெருக்கிப் பல னளிப்பது. அந்தணர்குலத்து வணிகனுக்கு முத்தி கொடுத்தது. திருமால், அம்சகேது, நந்தகன், இந்திரன், துருவாசன், முதலியோர் வழிபட்டு நற் பேறு பெற்றது. வாசுகி பாற்கடல் கடைந்ததால் உண்டான தன்னுடைய மெலிவு தீரப் பெருமானை வழிபட்டு அவன் திருமேனிக்கு அணியாகும் பேறு பெற்றது. தலத்துக்கும் வன்மீகபுரம் என்ற பெயர் உண்டாயிற்று. தமிழில் புற்றூர் எனப்படும். இவ்வாறாக இத்தலம் மூர்த்திகளின் சந்நிதி விசே ஷத்தாலும், தேவாரம் முதலிய இலக்கிய நூல்களா லும், புராணக் கதைகளாலும் பலவகையிலும் பெருமை பெற்று விளங்குகிறது. இக்கோவிலில்

ஸ்ரீ மாணிக்கவண்ணர் வண்டார் குழலாளொடு எழுந்தருளி யாவர்க்கும் அருள் சுரந்து காட்சி கொடுத்து வருகிறார். இக்கோயிலில் நவக்கிரகங்கள் இல்லை. சனீஸ்வரர் சந்நிதி மட்டும் உண்டு.

" கண்டு பல்மணிகால் யாத்த காமரு கனகக் கோயில்
அண்டு விண்ணவர் முன்னுேர் யாவர்க்கும் அருள் சுரந்து
விண்டு நீங்கில மென்றம்மா வேதங்கள் பலவும் ஆர்ப்ப
வண்டுவார் குழலாளோடு மாணிக்கவண்ணர் வாழ்வார்."

(தல புராணம்)

## 7. ஸ்ரீ துர்க்கா பரமேஸ்வரியின் மகிமைகள்

மகிடாசுர வதத்திற்குப்பின் இறையருளால் வேண்டுவார்க்கு வேண்டும் வரம் நல்கும் நோக்குடன் ஸ்ரீ துர்க்கா பரமேஸ்வரிஇத் திருத்தலத்தில் எழுந்தருளி இருக்கிறார். சுக்கிரவார தினங்கள் விசேஷ சிறப்புடையது. இத்தலத்தில் ஸ்ரீ துர்க்கா தேவியைப் பக்தியுடன் வழிபடுவோர்க்குப் பல நன்மைகள் ஏற்படுகின்றன. நவக்கிரகதோஷ நிவர்த்தி ஏற்படுகிறது. சித்தப் பிரமை, பில்லி சூன்யம், பல வித கொடிய ரோகங்கள் பிடித்தவர்கள் குணமடைவார்கள். பிரார்த்தனைகள் விரைவில் ஈடேறும். விவாகப் பிரார்த்தனை உடன் கைகூடும். இச்சந்நிதியில் திருமணம் செய்து கொள்வதால், மக்கட் செல்வம், பொருள் செல்வம் பெற்று நீண்ட நாள் வாழ்வர்.

" வலிதரு பேய்களும் வகுத்த நோய்களும்
கலிதரு வறுமையும் கலக்கும் யாவையும்
ஒலிதரும் அரதனபுரத்து மேவுறும்
ஒலிதரு கொற்றிபேர் உரைக்கத் தீருமே "

(தலபுராணம்)

## 8. திருப்பணிகள்

முன்ஞேர்கள் ஏற்படுத்திய கோயில்களுக்கு எவ்வித தீங்கும் நேராதபடி பாதுகாத்து அவ்வப் பொழுது ஆவன செய்யவேண்டும். புதியதோர் கோயிலே அமைப்பதைப் பார்க்கிலும், பழமையான கோயிலேப் புதுப்பித்தல் மிக்க புண்ணியந்தரும்.

" புதி துறப் பணிகள் வேறு புரிவதின் பழயதொன்றை விதியுளி
புதுக்கு வோர்க்கு மிகப் புண்ணியந்தான் எய்தும் "

என்று ஆன்ருேர் கூறியுள்ளார்.

'' மாதவர் மடங்களாதி வரதன் மந்திரங்களாதி
நாதமா லிங்கமாதி நளினபுட் கரணியாதி
சேதமுற்றிடின் முன்போல் செய்பவர்க் குறுபலன்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரங்குணித மோங்கும் "
(சிவபுண்ணியத் தெளிவு)

" புல்லிஞல் வருடங்கோடி புதுமண்ணுல் பத்துக்கோடி
தெள்ளிய செங்கலாலே செய்தபேர் நூறுகோடி
அல்லியங்கோதை பாகற்கு ஆலயமடாலயங்கள்
கல்லிஞற் செய்தபேர்கள் கைலேவிட்டகலார்தாமே "

இக்கோவில் திருப்பணி செய்யவேண்டிய நிலே யில் உள்ளது. முன் மண்டபங்கள் செங்கல்லால் அமைக்கப் பெற்றவை. இதுவே இக்கோயிலின் பழமையைக் குறிக்கும். ஆகவே கோயிலேப் புதுப் பிக்கும் திருப்பணியில் அன்பர்கள் கலந்து கொள் வார்களாக. திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம் பதித்த சலவைக்கல்லேயும், திருப்பணிக்கல்லேயும்

அறநிலைய ஆட்சித்துறை (H. R. & C. E.) முன் ஆணையர் திரு. A. உத்தண்டராம பிள்ளை, B. A., B. L., அவர்கள் 25–5–59ல் திறந்துவைத்தார்கள்.

### 9. சிற்பங்கள்

கோயில் சிறு பெட்டகம்போல் உள்ளது. முன் வாயில் வெறும் வாயிலாகவும், உள் வாயில் கோபுரம் மூன்றுகண்களைக் கொண்டும் விளங்குகின்றன. சுவாமி, அம்மன் மண்டபங்கள் கருங்கல்லாலும்; மற்ற மண்டபங்கள் செங்கல்லாலும் அமைக்கப் பெற்றவை. தேவியார்-துர்க்கை-ஆகியோரின் சிலைச் சிற்பங்கள் வசீகரிக்கும் நிலையில் உள்ளன. பிக்ஷாடனர் – வாசுகி முதலிய உற்சவ மூர்த்திகளின் சிற்பங்கள் மிகவும் அழகாய்க் கண்டார் யாவரும் காமுறும் நிலையில் உள்ளன. வருகின்றவர்களுக்கு நீர்வேட்கையைத் தீர்க்க அமைந்தது போல் கோயிலுக்கு முன் திருக்குளம் உள்ளது. சம்பந்தர் ஒவ்வோர் பாடலிலும் பிக்ஷாடனமூர்த்தியைக் குறித்து "ஊர்திரிந்தையங்கொண்டு, புரைகெழுவெண்டலையேந்தி, புன்றலையங்கையிலேந்தி, ஊரிடு பிச்சைகொள் செல்வம்" முதலிய தொடர்களால் பிட்சாடனரைப் போற்றியிருப்பதால் இத்தலத்தில் அப்பெருமானுக்குத் தனிச் சிறப்புள்ளது போலும். விமானத்தைச் சுற்றியுள்ள கல் மாடங்கள், தூண்கள் நல்ல சிற்பம் பொருந்தியுள்ளன.

### 10 தினப்பூஜையும், திருவிழாக்களும்

கோயில்களில் பூஜை முதலியன நடைபெறுமல் முட்டுப்பாடு ஏற்பட்டால் நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்பர்.

" கண்ணுதற் பெருமான்மேய கோயிலில் காலந்தோறும்
நண்ணுதற் பூசையாதி விதிப்படி நடத்தல் வேண்டும்
பண்ணுதல் தவறுமாயின் பார்த்திபன் தனக்கும்பாரில்
அண்ணுபல் உயிர்க்கும் தீமை அணுகுதல் சரதமாமே "

(மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை)

இக்கோயிலில் தினந்தோறும் காலை 9 மணிக்கும், உச்சி $11\frac{1}{2}$ மணிக்கும், மாலை $5\frac{1}{2}$ மணிக்கும், இரவு $8\frac{1}{2}$ மணிக்கும் ஆக நான்கு காலங்களில் பூஜை வழிபாடு நிகழும். இரவு 9 மணிக்குப் பள்ளியறைப் பூஜை. பூஜை நேரங்களில் பெரிய மணி அடிக்கப்படும். அந்தந்த நேரங்களிற் சென்று வழிபடுவது நலந்தரும்.

" காலை தொழ அற்றை வினைக்கட்கலும் கட்டுச்சி
வேலை தொழ இப்பிறப்பில் வெந்துயர்போம்—மாலையினில்
வந்து சிவன் தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பின்
வெந்துயர மெல்லாம் விடும் "

(சிவதரிசன மகத்துவம்)

(கோயிலில் அர்ச்சனைக்கு 108-க்கு 12 காசும், ஆயிரத்துக்கு 50 காசும் வசூலிக்கப்படுகின்றன. கல்யாணத்திற்கு ரூ. 12 கட்டணம்).

மேலும் பிரதோட காலத்தில் சென்று சிவ தரிசனம் செய்வது மிகவும் சிறப்பு. பிரதோட காலமாவது வளர்பிறையிலும் தேய்பிறையிலும் வரும் திரயோதசி திதிகளில் சூரியன் மறைவதற்கு முன்னுள்ள மூன்றே முக்கால் நாழிகையும், பின்னுள்ள மூன்றே முக்கால் நாழிகையும் கொண்ட காலம். சிவபெருமான் ஆலகாலம விடம் உண்டருளிய காலம் என்பர்.

" வாழிய இருபக்கத்தும் வளர்திரயோதசிக்கண்
ஆழியிற் கதிரோன் வீழும் அதற்குமுன் மூன்றேமுக்கால்
நாழிகைபின்னு மந்த நாழிகை இணையகாலம்
பாழியங் கடல் சூழ் வைப்போர் பகர் பிரதோடம் என்பார் "
(தனியூர்ப் புராணம்—மகா வித்வான்)

கோயிலில் அவ்வப்போது லட்சார்ச்சனை நிகழ்வதுண்டு. சென்ற தை மாதத்தில் துர்க்கையம்மனுக்கு லட்சார்ச்சனை நடந்தது.

## திருவிழாக்கள்

ஆண்டு தோறும் வைகாசி மாதம் விசாக நாளில் ஏகதின மகோற்சவம்—ஒரு நாள் விழா சிறப்பாய் நடைபெறும். அன்றைக்குக் காலையில் சுவாமி புறப்பாடும் தீர்த்தவாரியும் நிகழும். மாலையில் இன்னிசையும் சமயச்சொற்பொழிவுகளும் இரவில் பஞ்சமூர்த்திகள் புறப்பாடும் நிகழும். மற்று ஆடிப்பூரம், ஆவணி மூலம், விநாயக சதுர்த்தி முதலிய விசேட நாட்களில் பூஜைகள் நிகழும். புரட்டாசியில் நவராத்திரி நாட்களில் அம்மன் கொலுவிருக்கும். இன்னிசைகளும், சொற்பொழிவுகளும் நிகழும். 9-ம் நாளில் புறப்பாடும், விஜய தசமி நாளில் அம்பு போடுதலும் நிகழும். ஒருநாள் அன்னாபிஷேகம். ஒரு கலம் அரிசி அளவில் நடைபெறும். ஐப்பசி மாதத்தில் தீபாவளி நாளில் மூர்த்திகளுக்குப் புத்தாடைகள் சாத்தப்பெறும். கந்தர் சஷ்டி விழா கடைசி நாளில் சூர சம்மாரம் நிகழும். கார்த்திகை சோமவார நாட்களில் அபிஷேக ஆராதனைகளும், கார்த்திகை நாளில் 3 சுடலைகள் கொளுத்தப்படும். சுவாமி புறப்பாடும்

உண்டு. மார்கழி மாதத்தில் திருவெம்பாவை—திருப்பாவைப் பாடல்கள் காலையில் ஒலி பரப்பப் படும். தனி மகாநாடுகளும் நிகழும். திருவாதிரை நாளில் நடராஜர் புறப்படும். தை மாதம் பொங்கல் நாளில் அபிஷேகமும், மாட்டுப் பொங்கல் நாளில் பாரி வேட்டையும் நிகழும். மாசி சிவராத்திரி நாளில் நான்கு காலங்களிலும் அபிஷேகம் நிகழும்.

"ஆதியும் அந்தமும் அற்ற பரம பொருளான பரமேஸ்வரன், நள்ளிரவில், தம்மை லிங்கோர்பவ மூர்த்தியாக விசுவரூபம் எடுத்துக் காட்டிய நாளே சிவராத்திரியாகும்.

(காமகோடி).

பங்குனி உத்திர நாளில் சுப்பிரமணியர் புறப் படும். சித்திரை மாதப் பிறப்பில் புதுப் பஞ்சாங்கம் வாசிக்கப்படும். பஞ்சமூர்த்திகளுக்கு அலங்கார மும் பூஜையும் நிகழும்.'

" மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்
கண்ணினுல் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல் "

என்னும் பெரிய புராணப் பாடலின்படி மனித ராய்ப் பிறந்தவர் அனைவரும் பெருமானுக்கு நடை பெறும் திருவிழாக்களைக் கண்டு தரிசித்துப் பெரு மான் அருளைப் பெறுவார்களாக.

## 11. கோயில் தரிசன முறை

கோயிலுக்குச் செல்வோர் நீராடிச் சிவ சின் னங்கள் ஆகிய திருநீறு, உருத்திராக்கம் அணிந்து,

தேங்காய், பழம், கற்பூரம் முதலியவற்றில் இயன்ற அளவு எடுத்துச் செல்ல வேண்டும். முதலில் விநாயகரையும், முருகப் பெருமானையும், சிவபிரானையும் பிறகு நடராஜர் தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சமயகுரவர் நால்வர், அறுபத்துமூவர் முதலியோரையும் பிறகு தேவியாரையும், சண்டிகேஸ்வரரையும் முறையாகத் தரிசிக்கவேண்டும். சிறிது நேரம் மௌனமாயிருந்து தியானிக்க வேண்டும்.

கோயிலில் செய்யத் தகாத குற்றங்கள் : மல சலங் கழித்தல், எச்சில் உமிழ்தல், சூதாடுதல், ஆசாரமில்லாது செல்லுதல், வீண் வார்த்தை பேசுதல், அவசரமாக வலம் வருதல், நந்தி தேவருக்கும் சிவபெருமானுக்கும் குறுக்கே போதல் நிர்மாலியப் பொருள்களை மிதித்தல் முதலியன

## 12. வருமானமும் சொத்துக்களும்

இக்கோயிலுக்குச் சுமார் 133 ஏக்கர் நன்செய் நிலங்களும், 123 ஏக்கர் புன்செய் நிலங்களும் உள்ளன. இவைகள் திருவாளொளிபுத்தூர், பட்டவிர்த்தி, சேத்தூர் முதலிய கிராமங்களில் உள்ளன. ஆண்டு வருமானம் சுமார் ரூ. 23,000. மோகினித் தொகை ரூ. 5–8–6.

## 13. நிர்வாகம்

இக் கோயிலின் நிர்வாகம் முன்னர் தேவஸ்தானக் கமிட்டியின் மேற்பார்வையில் இருந்து வந்தது. தற்போது சென்னை அறநிலைய ஆட்சித்

துறை (Hindu Religious and Charitable Endowments) நேர் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. அறநிலையத்தாரால் 27—9—57ல் முதன் முறையாக நியமிக்கப் பெற்ற நிர்வாக அதிகாரியும் (E. O.), பரம்பரைத் தர்மகர்த்தர்களும் கோயில் காரியங்களைக் கவனித்து வருகிறார்கள்.

## 14. புராண வரலாறுகள்.

இந்தத் தலப் பெருமைகளைத் தொகுத்து ஓர் புராணம் செய்யுளில் உள்ளது. திரிசிரபுரம் மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடியது. சொல்வளமும் பொருட்செறிவும் அமைந்தது. 'திருவாளொளி புற்றூர்ப் புராணம்' என்பது பெயர். கடவுள் வாழ்த்து முதல் வண்டுபூசித்த படலம்வரையில் 20 படலங்களைக் கொண்டு 526 பாடல்களில் பாடப் பெற்றது. புராணத்தில் பல வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. அவைகளின் குறிப்புக்கள் தலப் பெருமைகளில் காட்டப் பெற்றன. அவைகளில் முக்கியமானது, அர்ச்சுனனது வாளைப் புற்றில் ஒளித்து வைத்தது. அதனாலேயே இத் தலத்துக்குத் திருவாளொளிபுற்றூர் என்று பெயர் ஏற்பட்டது. அதன் சுருக்கம் வருமாறு:—

### அர்ச்சுனனது வாளை ஒளித்து வைத்தது,

நாரதமுனிவரின் உபதேசப்படி பாண்டவர்களுள் ஒருவனான அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை செய்யக் கருதிப் பல தலங்களையும் தரிசிக்கக் கருதி, கங்கை நீராடி காசி, சயிலம், காளத்தி முத

லிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு தென்னாடு நோக்கி நடந்தான். காஞ்சீபுரம், கழுக்குன்றம், திருவண்ணாமலை முதலிய க்ஷேத்திரங்களைக் கண்டு வணங்கிப் பிறகு சீர்காழி, வெண்காடு, திருப் புன்கூர் முதலிய தலங்களை வணங்கி அரதனபுர மாகிய இத்தலத்தை நோக்கி வந்தான். அப்போது கடுங்கோடைக் காலம். மழையில்லாமல் நீர் வேட் கையால் வாய்திறத்தல் போல் பூமி வெடித்துக் கிடந்தது. உலகத்துப் பயிர்கள் நீரின்றி வாடின. "ஞாலமெல்லாம் எவ்வுயிர்க்கும் நாவிடத்தும் புன லில்லை — மண்ணிடத்தும் புனலில்லை" என்று புராணம் கூறுகிறது. இத்தகைய கோடையில் அர்ச்சுனன் நீர் வேட்கையால் சோம்பி உள்ளும் புறமும் கொதிக்க வருந்தினான்.

> "மகங்கொதிக்க எழுந்ததழல் மருங்கடுத்த புழுவேபோல்
> நகங்கொதிக்க மரங்கொதிக்க நரலைமுழுவதுங் கொதிக்க
> சகங்கொதிக்க எழுந்த வெயில் தலைநாப்பண் அகப்பட்டு
> முகங்கொதிக்க அகங்கொதிக்க முதிர் சோபத்தழுந்தினான்"
> (புராணம்)

இவ்வாறு அருச்சுனன் நீர் வேட்கையால் நாவறண்டு துன்புற்றுப் பெருமானை நோக்கி என் துயரம் பார்த்திருப்பது அழகோ என்று பல முறை புலம்பினான்.

அப்போது அரதனபுரத்துக் கோயில் கொண்ட பெருமான் அருச்சுனனுக்கு அருள் செய்ய, விருத்த வேதியராய் மார்பில் பூணூல் துவளவும் திருவடிகள் பூமியில் தோயவும் கையில் தண்டுன்றி அருச்சுனனுக்கு முன்னேவந்து காட்சி

கொடுத்தார். விஜயனும் அவரைக் கை கூப்பி வணங்கித் தான் தீர்த்தயாத்திரை வந்த காரணத்தைக் கூறினுன். அருச்சுனன் மறையவருடைய ஊர் பெயரை வினவ, "அவர் தமக்கு ஒரு வூரென்றில்லே. ஓர் பெயரென்றில்லே. இவ்வூர் வாகையின் நிழலில் வதிவோம். மாணிக்கலிங்கரென்று கூறுவர்" என்ருர். அவர் அருச்சுனனிடம் தண்ணீர் வேண்டில் தம் பின்னே வர ஏவி முன் செல்ல விசயனும் பின்னே சென்ருன். மறையவர் வாகை மரத்தின் நிழலேயடைந்து தம் கைத் தண்டை அர்ச்சுனன் கையில் கொடுத்து தண்டூன்றிய இடத்தில் நீர் தோன்றும் என்ருர். அர்ச்சுனன் தன் கை வாளே அம்மறையவர் முன் ஓர் இடத்தில் வைத்து அவரிடம் தான் திரும்பிவரும் வரையில் எவரும் வாளே எடுக்காதபடி பார்த்துக் கொள்ளும்படி சொல்லி விட்டு நீர் அருந்தச் சென்ருன்.

விசயன் சென்றவுடன் வஞ்ச மறையவர் வாளே எடுத்துக் கோயில் புற்றில் மறைத்து, வாசுகிப் பாம்பைக் காவல் இருக்கச்செய்து தாம் லிங்கத்தில் மறைந்தருளினுர். இதனுலேயே இத்தலம் வாளொளிபுற்றூர் எனப் பெயராயிற்று.

" வஞ்ச மறையவர் விசயன் மறைதலுமா வயினமரும்
எஞ்சலிலாவன் மீகத்து இகறெறும் அவ்வாளொளித்து
மஞ்சமைதம்பூணுய வாசுகியைக் காப்பியற்றி
விஞ்சநடந் தமலிங்க மேவி உருக்கரந்தனரே "
(தலபுராணம்)

அர்ச்சுனன் மறையவர் கொடுத்த தண்டை ஓரிடத்தில் ஊன்ற நீர் வெளிப்பட்டது. வேண்டு

மட்டும் நீர்பருகி மகிழ்ச்சியடைந்து அதி விரைவில் வாகை மர நிழலுக்குத் திரும்பி வந்தான். மறையவரையும் வாளையும் காணவில்லை. மனங்கலங்கிப் பலவாறு புலம்பிஞன். அருச்சுனது புலமபல்கள் பல பாடல்களில் கூறப்பட்டன. ஓர் பாடல் :—

" ஐயரே எங்குற்றீர் அடியனேன் புன்வெரின் தடவும்
கையரே எங்குற்றீர் கைத்தண்டமது கொடுத்த
செய்யரே எங்குற்றீர் திருந்த நீர்நசை தணித்த
மெய்யரே எங்குற்றீர் வேதியரே எங்குற்றீர் "

(தல புராணம்)

மேலும் அருச்சுனன் " முன்னே நீர் வேட்கையால் கவலையுற்றேன். இப்போது வாளைக்காணுது கவலை. எப்போதும் கவலைப்படுதலே இக்கால இயல்போ. முன்னுளில் இராவணனுக்கு வாள் கொடுத்தாய். இப்போது என் கைவாளை மறைத்தீர். இவை உன் கருணைக்கழகோ " என்று புலம்பிஞன்.

இவ்வாறு புலம்பும் அருச்சுனன் மறையவர் சென்ற காலடிச்சுவட்டைக் கண்டு அதன் வழியே சென்று ஓர் சிவலிங்கத்தைக் கண்டு வணங்கிஞன். பெருமான் அருள் சுரந்து " காண்டீபனே உன்மேல் வைத்த பிரியத்தால் நாம் செய்த திருவிளையாடல். உனது கைவாளை வாகை மரப்புற்றில் ஒளித்து வைத்தேன் எடுத்துக்கொள்" என அருள் செய்தார்.

" என்ற வாள் விசய னெதிர் எம்பிரான் அருள் சுரந்து
வென்ற காண்டீபா உன்மேல் வைத்த பிரியத்தால்

ஒன்ற நாம்புரி விளையாட்டு ணர்ந்திடுதி உன் கரவாள்
நின்றவாகை யின்யற்புற் றொளித்தனன் கொள்நீ என்றான்'
(தல புராணம்)

பெருமாள் அருளியபடியே அருச்சுனன் பணிந் தெழுந்து கோயில் புற்றிடம் சென்று வாளை எடுக்க முயன்றான். அதைக் காத்து வந்த வாசுகி என்னும் நாகம் சீறியது. அருச்சுனன் பயந்து பெருமானிடம் முறையிடவே, பெருமான் நந்தியை நோக்க நந்தி முகக் குறிப்பால் வாசுகியை அடக்க விசயன் மீண்டும் புற்றிடம் சென்று உறையி னின்று எடுப்பதுபோல் தன் வாளை எடுத்துக் கொண்டு பெருமானையும் தேவியையும் போற்றித் தன் ஊரையடைந்தான். அந்நாள் முதல் இவ்வூர் வாள்ஒளிபுற்றூர் என்றும், அயன் தீர்த்தம் தண்ட தீர்த்தமெனவும் பெயர்கள் ஏற்பட்டன. வாசு கியை அடக்கும்முறையில் நந்தியின் முகம் இன்றும் தென்பாகம் திரும்பியிருப்பதைக் காணலாம்.

' சென்று தனதூரடைந்தான் திகழும் அரதன புரத்தை
அன்றுமுதல் வாளொளிபுற்றூர் என்பர் அயன் தீர்த்தம்
ஒன்று மலிதரு தண்ட தீர்த்த நாமம் புனைந்தது
இன்றும் விடைமுகஞ் சாய்ந்தேயிருக்கும் இஃதுணர்தரவே''
(தல புராணம்)

## 15. துதிப்பாடல்கள்

# திருவாழ்கொளிபுத்தூர்த் தேவாரம்

திருச்சிற்றம்பலம்

தக்கராகப்பண்] திருஞானசம்பந்தர் [முதல் திருமுறை

பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடை சூழக், கொடியுடையூர்திரிந் தையங்கொண்டு பலபலகூறி, வடிவுடை வாள்நெடுங் கண்ணுமைபாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர்க், கடிமலர்மாமலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம் (1)

அரைகெழுகோவண ஆடையின்மேலோர் ஆடரவம் அசைத்தையம், புரைகெழுவெண்டலை யேந்திப் போர்விடை யேறிப்புகழ, வரைகெழுமங்கைய தாகமொர்பாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர், விரைகமழ்மாமலர் தூவி விரிசடையானடி சேர்வோம். (2)

பூண்நெடுநாகம் அசைத்தனலாடிப் புன்றலையங்கையிலேந்தி, ஊணிடுபிச்சையூ ரையம் உண்டி என்றுபலகூறி, வாணெடுங் கண்ணுமை மங்கையொர்பாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர்த், தாள்நெடுமாமலரிட்டுத் தலைவனதாள்நிழல் சார்வோம். (3)

தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை தாழ்சடை மேலவை சூடி, ஊரிடுபிச்சைகொள் செல்வம் உண்டி என்றுபலகூறி, வாரிடு மென்முலை மாதொருபாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர்க், காரிடு மாமலர்தூவிக் கறைமிடற்றானடி காண்போம். (4)

கனமலர்க்கொன்றை அலங்கலிலங்கக் காதிலொர் வெண்குழையோடு, புனமலர்மாலை புனைந்தூர் புகுதி என்றுபலகூறி, வனமுலைமாமலை மங்கையொர்பாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர், இனமலரேய்ந்தன தூவி எம்பெருமானடி சேர்வோம். (5)

அளைவளர்நாகம சைத்தனலாடி அலர்மிசைஅந்தணன்உச்சிக், களைதலையிற்பலி கொள்ளும் கருத்தனே கள்வனே என்று, வளையொலிமுன்கை மடந்தையொர்பாகம் ஆயவன் வாழ்கொளி புத்தூர்த், தளையவிழ்மாமலர்தூவித் தலைவனதாளிணை சார்வோம்.(6)

அடர்செவிவேழத்தின் ஈருரிபோர்த்து வழிதலையங்கையி லேந்தி, உடலிடுபிச்சையோ டையம் உண்டி என்றுபலகூறி, மடல்நெடுமாமலர்க் கண்ணியொர்பாகம் ஆயவன் வாழ்கொளி புத்தூர்த், தடமலராயினதூவித் தலைவன தாள்நிழல் சார்வோம். (7)

உயர்வரையொல்க எடுத்த அரக்கன் ஒளிர் கடகக்கை அடர்த்து, அயலிடுபிச்சையோ டையம் ஆர்தலை என்றடி போற்றி, வயல்விரி நீல நெடுங்கணிபாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர், சயவிரிமாமலர் தூவித் தாழ்சடையானடி சார்வோம். (8)

கரியவன்நான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலும் ஆகா, எரியுருவாகியூ ரையம் இடுபலி யுண்ணிஎன் றேத்தி, வரியர வல்குல் மடந்தை யொர்பாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,விரிமல ராயினதூவி விகிர்தனசேவடி சேர்வோம். (9)

குண்டமணர்துவர்க் கூறைகள்மெய்யிற் கொள்கையினார் புறங்கூற, வெண்டலையிற்பலி கொண்டல் விரும்பினைஎன்று விளம்பி, வண்டமர்பூங்குழல் மங்கையொர்பாகம் ஆயவன் வாழ் கொளிபுத்தூர்த், தொண்டர்கள்மாமலர்தூவத் தோன்றிநின்றானடி சேர்வோம். (10)

கல்லுயர் மாக்கடல் நின்றுமுழங்குங் கரைபொரு காழிய மூதூர், நல்லுயர் நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம் பந்தன், வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன் வாழ்கொளிபுத் தூர்ச், சொல்லியபாடல்கள் வல்லார் துயர்கெடுதல்எளி தாமே.(11)



திரு. பிட்சாடனர்



வரமுடைப் பணியாம் வாசுகி

## 4. கோயிலின் அமைப்பு படம்




கிழமேலடி 300

எண்களின் விளக்கம் 8ம் பக்கம் பார்க்க.

## 13. நிர்வாகம் — (பின் சேர்க்கை)

தற்போது அறநிலைய ஆட்சித்துறை (H. R. & C. E.) துணை ஆணையர் (D. C.) அவர்களின் O. A. No. *138/59* 24—*3*—62 தேதி திட்டப்படி (Scheme) இக்கோயிலின் பரம்பரைத் தர்மகர்த்தர்களாலும், புதிதாக நியமிக்கப் பெற்ற நிர்வாக அதிகாரி அவர்களாலும் ஆலய அலுவல்கள் சிறப்பாய் நடைபெற்று வருகின்றன.

பியந்தைக்காந்தாரப்பண்[ திருஞானசம்பந்தர் [2-ம் திருமுறை

சாகை ஆயிரம் உடையார்
சாமமும் ஓதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி
இரப்பது பலபல உடையார்
தோகை மாமயில் அனைய
துடியிடை பாகமும் உடையார்
வாகை நுண்துளி வீசும்
வாழ்கொளி புத்தூர் உளாரே. (1)

கலங்கொள் பூம்பொழிற் காழி
நற்றமிழ் ஞானசம் பந்தன்
வலங்கொள் வெண்மழு வாளன்
வாழ்கொளி புத்தூர் உளானை
இலங்கு வெண்பிறை யானை
ஏத்திய தமிழிவை வல்லார்
கலங்கொள் சிந்தைய ராகி
நன்னெறி எய்துவர் தாமே.

தக்கேசிப்பண் ] சுந்தரர் [ -7ம் திருமுறை

தலைக்க லன்தலை மேல்தரித் தானை
தன்னைஎன் னைநினைக் கத்தரு வானைக்
கொலைக்கையா னைஉரி போர்த்துகந் தானைக்
கூற்றுதைத் தகுரை சேர்கழ லானை
அலைத்தசெங் கண்விடை ஏறவல் லானை
ஆனை யால்அடி யேன்அடி நாயேன்
மலைத்தசெங் நெல்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே (1)

வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனென்று
உளங்கு ளிர்தமிழ் ஊரன்வன் றெண்டன்
சடையன் காதலன் வனப்பகை அப்பன்
நலங்கி ளர்வயல் நாவலர் வேந்தன்
நங்கை சிங்கடி தந்தை பயந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேல்
பறையு மாம்செய்த பாவங்கள் தானே. (12)

## அப்பர் சுவாமிகள் க்ஷேத்திரக் கோவை

மண்ணிப் படிக்கரை வாள் கொளிபுத்தூர்
வக்கரை மந்தாரம் வாரணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக்குடி
விளமர் விராடபுரம் வேட்களத்தும்
பெண்ணை அருட்டுறை தண் பெண்ணாடகம்
பிரம்பில் பெரும்புலியூர் பெருவேளூரும்
கண்ணை களர்க்காறை கழிப்பாலையும்
கயிலாய நாதனையே காணலாமே.

## சிவநாமப் பஃறொடை வெண்பா.

வாழ் கொளிபுத் தூரிலுறும் வண்டமர் பூங்குழற்கு
வாழ்வு தரு மாணிக்க வண்ணனே.

## திருவாளொளிபுற்றூர்ப் புராணம்

திரிசிரபுரம் மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றியது. 20 படலங்களையுடையது.

## சித்தி விநாயகர்

1. படைப்பவன் படைக்கும் போதும் பரிப்பவன் பரிக்கும் போதும்
துடைப்பவன் துடைக்கும் போதும் துதிகமழ் பூசையாற்ற
உடைப்பவனுடைக்கு மூற்றை உற்ற வெஞ்சன்ம வாயில்
அடைப்பவன் சித்திநாமத் தண்ணலே எண்ணுவாமே.

## சுப்பிரமணியர்

2. கரியபுனற் கடல் சுருங்கச் செய்யபுனல் கடல்பெருகக்
ககன முலாவும்
பெரியமலை விழுந்தழுந்த குணபமலை எழுந்துயரப்
பிறங்குவானோர்
உரியநகர் வாழ்வுற மற் றவுணர் நகர் தாழ்வுற வேல்
ஒருகை தொட்ட
அரியபுகழ் ஒருமுருகன் இரு சரணம் முப்பொழுதும்
அடுத்து வாழ்வாம்

## மாணிக்கலிங்கர்

3. சீர்பூத்த நறுங்கமல மேலவனும் மாலவனும்
செம்பொனுய
ஊர்பூத்த சுதன்ம சபை யானுமொளி யீனுமுடி
உம்பராரும்
நார்பூத்த புவியாருங் குவியாரும் வந்திறைஞ்ச
நாளும் நல்கி
ஏர்பூத்த வானொளிபுற் றூமர் மாணிக்கலிங்கர்
இரு தாள் போற்றி.

## வண்டுவார் பூங்குழலி

4. வன்மை யுறு தனக்கேற்ப வன்குரல்மான் அங்கை கொண்ட
மணிமாணிக்கத்
தன்மையுறு பரன்பொருவ மரகதத்தின் தன்மையுற்றுத்
தளிரினுன்ற

மென்மையுறு தனக்கேற்ப மென்குரற்பைங் கிளியங்கை
விரவக் கொண்ட
நன்மையுறு வண்டுவார் பூங்குழல் நாயகி மலர்த்தாள்
நண்ணிவாழ்வாம்.

## தக்ஷிணாமூர்த்தி

5. மன்னியபிணிக் கோட்பட்டு வருந்துவாரின்பமெய்தத்
துன்னியமருந்து கட்டிச் சுமந்திடு பிடகரேபோல்
பன்னிய மலக் கோட்பட்டார் பரகதியடைய நாளும்
மின்னிய ஞானபோதஞ் சுமப்பவர் விரைத்தாள் உள்வாம்.

## தண்டீசர்

6. பசுப்பல விருப்பினோம்பிப் பால் கறந்தருந்தி நாளு
முசுப்படுமத் தான் மொத்துண்டுழன்றவன் நாணவாக் கண்
முசுப்பயில் பொழில் முற்றேத்து முனிவறவோம்பி யங்கை
வசுப்பரற்கின் பாலாட்டி வாழ்ந்த சேய் பாதம் போற்றி.

## அறுபத்துமூவர்

7. மயற்கருங்கடலில் வீழ்த்தா வாய்மை யதாய வெவ்வோர்
செயற் கருஞ் செய்கை செய்து திருவருணிரம்பப் பெற்றே
அயற்கரும் பாசநீத்த அறுபத்துமூவர் தாளும்
கயற் கருங்கண்ணார் மான்முற் கழிதரக் கருதிவாழ்வாம்.

## துர்க்கை

8. அழலவிர் குடங்கை யேந்தும் அரதனபுரத்துப் பெம்மான்
கழல் வழிபாடு செய்து கடுங்கொலை மகிடஞ் சாய்த்துப்
புழல்படு காற் பூவோன் முற் புலவர்கள் உவப்ப நாளும்
சுழல்விழி மடங்கலூருஞ் சூரரிப் பிணவை உள்வாம்.

## திருஞானசம்பந்தர்

9 ஒரு முன' சாபத் தீமை கழிதர வுருப்பருது
மருவு கல்லணங்கு செய்த மாயவன் நாணங் கொள்ளத்
துருவரும் பொடி யெலும்போர் தோகையஞ் சாயலாகப்
பொருவரும் மலர் வாய்விண்ட புதல்வனைப் போற்றி வாழ்வாம்

## திருநாவுக்கரசர்

10. ஒரோவொரு மாதர் மாமை நோக்கியுள்ளழிந்து மாழ்குஞ்
சரோருக நெடுமாலாதி வானவர் சமழ்ப்புக் கொள்ள
வரோதய மடவார் மாமை சிறிதுமுண் மதியாராகிப்
பரோபகாரத் தொண்டாற்றி யிருந்தவர் பாதம் போற்றி.

## சுந்தரமூர்த்தியார்

11. கானகம் பொருந்து முள்ளுங் கல்லுந்தன் காலிற் றைப்பத்
தானக நெகிழ்ந்து மூன்ற தடஞ்சிலை இராமன் நாண
மேனக வொருமாப் பெற்று மண் சரித்தொரு வெள்ளானை
வானகம்புகும் போதுற்ற வள்ளலைச் சரணஞ் சார்வாம்.

## மாணிக்கவாசகர்

12. குருந்தடியிருந்து மோனக் குருவுருக் கொண்டு பெம்மான்
திருந்தடி சூட்டியாளச் சிவானந்தப் பரவை மூழ்கி
வருந்தடி யேங்களுய்ய வாசக மணியு நல்கிப்
பொருந்தடி யடைந்த ஞானப் புனிதனைப் போற்றி வாழ்வாம

## துதிப்பாடல்

13. மூவாத முழுமுதலே முத்தியளித் தருள்வாழ்வே
தாவாத பெருங்கிருபா சாகரமே தனித்துணையே
கோவாத முத்தமெனக் குலவுசுடர் அரதனமே
ஓவாத நின்கருணை உறுமாறு தொழுகின்றேன்.

## புராணப் பயன்

14. இப்புராணம் எழுதிவைப் போரதைத்
தப்புறுது படிப்பவர் சாற்றுவோர்
எய்ப்பு நீத்துறக் கேட்பவர் யாவரும்
செப்பு வாழ்விற் றிருந்திப் பின்பெய்துவார்.

## வாழ்த்து

15. மன்னிய வேதாக மங்கள் வாழ்க
வாளொளிபுற்றூர் வாழ்க மேலோர்
பன்னிய சீர்வண்டுவாழ் குழல ம்மை
பெருங் கருணை பரந்து வாழ்க
துன்னிய மாணிக்க லிங்கப் பெருமானூர்
மறைமுழங்கத் தூயோர் வாழ்த்த
இன்னியமார் தருமன்றுள் நடநவில
எடுத்தபொற்றுள் என்றும் வாழ்க.

ஸ்ரீமாணிக்க லிங்கர் மலரடி போற்றி.

